॥ ॐ ॥

॥ तत्सद्ब्रह्मणे नमः ॥

ஸ்ரீ பரமாநந்தஸரஸ்வதிஸ்வாமிகள்

இயற்றியருளிய

# ॥ श्री श्रुतिषड्लिंगसंग्रहः ॥

# ஸ்ரீ சுருதிஷட்லிங்கசங்கிரகம்.

இது

தஞ்சைமாநகரம்

பிரஹ்மநிஷ்டபண்டித

ஸ்ரீ வி. குப்புஸ்வாமிராஜு என்னும்

பூர்வாசிரமநாமம் பூண்டிருந்த

ஸ்ரீ பிரஹ்மாநந்தசுவாமிகள்

இயற்றியருளிய

தமிழுரையுடன்

ஸ்ரீ சங்கரவிலாசசாரதாமந்திர

டிரஸ்டிகளால்

தஞ்சை

ஸ்ரீ சங்கரவிலாச சாரதாமந்திர முத்திராக்ஷரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றது.

---

இதன் விலை ] ரௌத்திரி-ஸு [ அணா 8.

|| ॐ ||

|| तत्सद्ब्रह्मणे नमः ||

ஸ்ரீ பரமாநந்தஸரஸ்வதிஸ்வாமிகள்

இயற்றியருளிய

# || श्री श्रुतिषड्लिङ्गसंग्रहः ||

# ஸ்ரீ சுருதிஷட்லிங்கசங்கிரகம்.

இது

தஞ்சைமாநகரம்

பிரஹ்மநிஷ்டபண்டித

ஸ்ரீ வி. குப்புஸ்வாமிராஜு என்னும்

பூர்வாசிரமநாமம் பூண்டிருந்த

ஸ்ரீ பிரஹ்மாநந்தஸ்வாமிகள்

இயற்றியருளிய

[illegible]

ஸ்ரீ சங்கரவிலாசசாரதாமந்திர

ட்ரஸ்டிகளால்

தஞ்சை

ஸ்ரீ சங்கரவிலாசசாரதாமந்திர முத்திராக்ஷரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றது.

இதன் விலை] ரௌத்திரி-ஞு [அணா 8.

ௐ

ஸ்ரீகணேசாயநம:

# முகவுரை.

அநாதிநித்தியமான வேதங்களை வைதிகர்களான
ஷண்மதஸ்தர்களும் சிரோபூஷணமாகக்கொள்ளுகின்றனர்.
அவற்றுள்ளும் கடைசியான ஞானகாண்டமாகிய உபநி
ஷத்துகள் விசேஷமானவைகளாம். அவை அநேகசாகா
பேதத்தால் பலவாயிருக்கினும் முக்திகோபநிடதத்திற்
கூறியுள்ள ௧௦௮ உபநிடதங்களையே யாவரும் கையாண்டு
வருகின்றனர். அவற்றுள், மதவாதிகள் தத்தமக்குரிய
உபநிடதங்களைக்கொண்டு பிறவற்றை உபேக்ஷையாய்க் கை
விடுவர். ஆனால் ஈசாதிபத்து உபநிடதங்களையோ ஷண்
மதத்தர் துவைதிகள் விசிஷ்டாத்வைதிகள் முதலிய பிறரும்
பரமப்பிரமாணமாகக் கொள்ளுவர். அவ்வாறு கொள்ளி
னும் சிலர் அவற்றிற்குத் தங்கடங்கள் இஷ்டப்படி துவைத
பரமாகவே அர்த்தம் செய்வர். அதைக் கேட்கும் மந்தமதி
யுடைய அத்வைதிகள் கலக்கமடைவர். அவர்கள் கலங்கா
வண்ணம் இந்நூலானது நிலவழக்குடையவர் கலக்கம்
தீரும் வண்ணம் கோல்கொண்டளந்து தீர்மானிப்பதுபோல
ஷட்லிங்கங் (ஆறுகுறிக)ளால் ஈசாதி அப்பத்து உபநிடதங்
களாகிய சுருதிகட்குத் தாற்பரியம் அத்வைதப் பிரஹ்மமே
என்று தெளிவாக ஒவ்வொரு உபநிஷத்திலும் பொருத்தி
காட்டுகின்றது. (ஷட்லிங்கங்கள் இவை என்பது இந்நூ
லின் உபோற்காதகீர்த்தனத்தில் நிரூபிக்கப்பட்டுளது.)
சாந்தோக்யாதி சில சுருதிகட்குப் பாஷ்ய வியாக்கியானங்
களில் ஷட்லிங்கங்களால் தாற்பரியநிச்சயம் முன் சில
ஆசிரியர்களாற் கூறப்பட்டிருக்கினும், பத்து உபநிடதங்
கட்கும் தாற்பரியம் இவ்வாறு ஒருநூலிலும் இதுகாறும்
கூறப்படவில்லை. ஆதலால் முமுக்ஷுக்களின் சம்சயத்தினை

யொழித்துத் திடஞானத்தினை யுண்டுபண்ணுவதற்கு இது வே பரமப்பிரமாணமான தக்கநூல் என்பதை இந்நூலைப் பார்ப்பவர் தாமே தெரிந்துகொள்ளுவர். இவ்வருமை நோக்கியே தமிழ்நாட்டாருய்யும்வண்ணம் இதற்குத் தஞ்சை மாநகரம் பிரஹ்ம நிஷ்டபண்டித ஸ்ரீ வி. குப்புஸ்வாமிராஜு என்னும் பூர்வாச்சிரம நாமம் பூண்டிருந்த ஸ்ரீபிரஹ்மானந்த சுவாமிகள் எளிய நடையில் ஓர் உரை இயற்றியருளினர். அதனைத் தஞ்சை ஸ்ரீ சங்கரவிலாச சாரதாமந்திர டிரஸ்டிகள் அச்சிட்டு வெளிப்படுத்தியது மிக்க உபகாரமேயாம்.

ஷை சுவாமிகள் மாணாக்கர்,

சரவணசுவாமி.

ओं

॥ प्रत्यगभिन्नब्रह्मणे नमः ॥

# अथ श्रीश्रुतिषड्लिंगसंग्रहः प्रारभ्यते ॥

இனி

## ஸ்ரீ சுருதிஷட்லிங்கசங்கிரகம்

ஆரம்பிக்கப்படுகின்றது.

### उपोद्घातकीर्त्तनम्

### க. உபோத்காதகீர்த்தனம்.

स्मृत्वाऽद्वैतपरमात्मानं शंकरं परमं गुरुम् ।
तात्पर्यसंविदे वक्ष्ये श्रुतिषड्लिंगसंग्रहम् ॥ १ ॥

(இ-ள்) அத்வைதபரமாத்மாவடிவ பரமகுருவாகிய ஸ்ரீ சங்கரரை ஸ்மரணஞ்செய்து, சுருதிகளினது தாற்பரிய ஞானத்தின்பொருட்டு, சுருதிஷட்லிங்கசங்கிரக மென்னும் சிறிய கிரந்தத்தினைச் செய்கின்றேன். (க)

विषयासक्तिमानस्थमेयस्थसंशयभ्रमाः ।
चत्वारः प्रतिबंधाः स्युर्ज्ञानादार्ढ्यस्य हेतवः ॥ २ ॥

(இ-ள்) க. விஷயாசக்தி, உ. பிரமாணகதசம்சயம், ங. பிரமேயகதசம்சயம், ச. பிரமமெனப்படும் விபரியயம் என்னும் நான்கும் ஞானதிடமின்மைக்குக் காரணங்களான பிரதிபந்தங்களாகின்றன. (உ)

आद्यस्य निवृत्तिः स्याद्वैराग्यादिचतुष्टयात् ।
श्रवणेन द्वितीयस्य मननात्तार्तीयस्य च ॥ ३ ॥

(இ-ள்) முதலாவதன் நிவிருத்தி வைராக்கியத்தினை ஆதியாகவுடைய சாதனநான்கினாலாகின்றது. இரண்டாவ

தன் நிவிருத்தி சிரவணத்தினாலும், மூன்றாவதன் நிவிருத்தி மனனத்தினாலுமாம். (௩)

ध्यानेन तु चतुर्थस्य विनिवृत्तिर्भवेद्ध्रुवम् ।
पूर्वपूर्वानिवृत्त्या नैवोत्तरोत्तरनाशनम् ॥ ४ ॥

(இ-ள்) நான்காவது பிரதிபந்தத்தின் நிவிருத்தி தியானமாகிய நிதித்தியாசனத்தினால் நிச்சயமாக ஆகின்றது. பூர்வபூர்வத்தின் அநிவிருத்தியினால் (நீங்காதபோது) உத்தர உத்தரத்தின் நாசம் (நிவிருத்தி) உண்டாகிறதில்லை. (௪)

विषयाशक्तिनाशेन विना नो श्रवणं भवेत् ।
ताभ्यामृते न मननं न ध्यानं तैर्विना भवेत् ॥ ५ ॥

(இ-ள்) விஷயாசக்திநாசமின்றி சிரவணமுண்டாகாது. அவ்விரண்டுமின்றி மனனமுண்டாகாது. அம்மூன்றுமின்றித் தியானமுண்டாகாது. (௫)

स्ववर्णाऽऽश्रमधर्मेण तपसा हरितोषणात् ।
साधनं प्रभवेत्पुंसां वैराग्यादिचतुष्टयम् ॥ ६ ॥

(இ-ள்) ஸ்வ (நித்தியாத்மாவாகிய சரீரத்தின்) வர்ணாசிரமதர்மத்தினாலும், கிருச்சிரசாந்திராயணமுதலிய தபசினாலும், ஹரிபஜனம் அல்லது சர்வஜீவர்களின்மேரில் வைக்கும் தயைமுதலிய வடிவமாகிய ஹரியைச்சந்தோஷிப்பிக்கும் கர்மத்தினாலும் வைராக்கியாதி சாதனம் நான்கும் புருஷர்களுக்கு மிகுதியாகவுண்டாகின்றன. (௬)

तस्सिद्धावुपसन्नः सन् गुरुं ब्रह्मविदुत्तमम् ।
ज्ञानोत्पत्त्यै महावाक्यश्रुतिं कुर्याद्धि तन्मुखात् ॥ ७ ॥

(இ-ள்) அந்நான்கு சாதனங்களும் சித்தித்தபோது, பிரஹ்மவித்துக்களுள் சிரேஷ்டராகிய குருவைச் சரணடைந்தவனாய், ஞானோற்பத்தியின் பொருட்டு அவர்முகமாக

வேதத்தில் பிரசித்தமான அர்த்தத்தோடுகூடிய மகாவாக்கியத்தின் சிரவணத்தினைச் செய்யக்கடவன். (எ)

तत्सिद्धौ द्वापरभ्रांतिप्रहाणाय मुमुक्षुभिः ।
श्रवणं मननं ध्यानमनुष्ठेयं फलावधि ॥ ८ ॥

(இ-ள்) அந்த ஞானம் சித்தித்தபோது முமுக்ஷுக்களால் த்வாபரமாகிய இருவகைச் சம்சயத்தினையும் பிராந்தியாகிய விபரீதபாவனையினையும் கெடுத்தற்பொருட்டுப் பிரமாணசம்சயமுதலிய மூவகைப் பிரதிபந்தத்தின் நாசவடிவ பலபரியந்தம் பொருந்துமாறு சிரவணமனனநிதித்தியாசனங்கள் செய்யத்தக்கனவாம். (அ)

श्रवणस्य प्रसिध्द्यैव भवतोत्ये तथा सति ।
द्वयोर्मूलं तु श्रवणं कर्तव्यं तद्धि धीधनैः ॥ ९ ॥

(இ-ள்) சிரவணத்தின் மிக்கசித்தியினாலேயே, கடைசியான மனனம்தியானமிரண்டும் ஆகின்றன. அவ்வாறாகவே, அவ்விரண்டன் பிரசித்தகாரணமான சிரவணம் எதுவோ அது புத்தியாகிய தனமுடையவர்களால் முதலிற் செய்யவேண்டியதாம். (கூ)

वेदांतानामशेषाणामादिमध्यावसानतः
ब्रह्मात्मन्येव तात्पर्यमिति धीः श्रवणं भवेत् ॥ १० ॥

(இ-ள்) தாற்பரியத்தினை நிர்ணயஞ்செய்யும் ஷட்லிங்கவடிவயுக்திகளால் "சர்வவேதாந்தங்களாகிய உபநிஷத்துக்களுக்கும் ஆதிமத்திய அந்தங்களால் பிரஹ்மவடிவ ஆத்மாவிலேயே தாற்பரியமாம்" என்னும் புத்தி(நிச்சயம்) சிரவணமாகின்றது. (இது சிரவணத்திற்கு சாஸ்திரத்திற் கூறப்பட்டுள்ள லக்ஷணமாம்). (கல)

उपक्रमोपसंहारावभ्यासोऽपूर्वता फलम् ।
अर्थवादोपपत्ती च लिंगं तात्पर्यनिर्णये ॥ ११ ॥

(இ-ள்) அந்த ஷட்லிங்கங்களை இப்பொழுது பெயரால் நிர்த்தேசஞ்செய்கின்றார்:—க, உபக்கிரமம் உபசங்காரமிரண்

டன் ஒருவடிவத்தன்மை, உ. அப்பியாசம், ங. அபூர்வதை, ச. பலம், ரு. அர்த்தவாதம், சு. உபபத்தி இவை ஒவ்வொன்றும் தாற்பரியத்தின் நிர்ணயத்தில் லிங்கமாம். ()

वस्तुनः प्रतिपाद्यस्याऽऽदावंते प्रतिपादनम् ।
उपक्रमोपसंहारौ तदैक्यं कथितं बुधैः ॥ १२ ॥

(இ-ள்) இப்போது ஆறு சுலோகங்களால் தனித்தனியே லிங்கத்தின் லக்ஷணத்தினைக் கூறுகின்றார் :—க. பிரகரணத்தாற் பிரதிபாதனஞ் செய்யத்தக்க பிரஹ்மவடிவ அத்விதீயவஸ்துவினைப் பிரகரணத்தின் ஆதியிலும் அந்தத்திலும் பிரதிபாதித்தல் எதுவோ அது உபக்கிரமமும் உபசங்காரமுமாம். அவற்றுள், ஆதியில் பிரதிபாதித்தல் எதுவோ அது உபக்கிரமமாம். அந்தத்தில் (முடிவில்) பிரதிபாதித்தல் எதுவோ, அது உபசங்காரமாம். அவ்விரண்டற்கும் ஒருலிங்கவடிவத்தன்மை பண்டிதர்களாற் கூறப்பட்டுளது.

वस्तुनः प्रतिपाद्यस्य पठनं च पुनः पुनः ।
अभ्यासः प्रोच्यते प्राज्ञैः स एवाऽऽवृत्तिशब्दभाक् ॥ १३ ॥

(இ-ள்) உ. பிரகரணத்தாற் பிரதிபாதிக்கத்தக்க அத்விதீயவஸ்துவினை அப்பிரகரணத்தின் மத்தியில் அடிக்கடி படித்தல் எதுவோ, அது பண்டிதர்களால் அப்பியாசமெனப்படுகின்றது. அவ்வப்பியாசமே ஆவிருத்தி சப்தத்தின் வாச்சியமாம். (கங)

श्रुतिभिन्नप्रमाणेनाविषयत्वमपूर्वता ।
कुत्रचित्स्वप्रकाशत्वमप्यमेयतयोच्यते ॥ १४ ॥

(இ-ள்) ங. பிரகரணத்தினாற் பிரதிபாதிக்கத்தக்க அத்விதீயவஸ்து சுருதியின் வேறான (பிரத்தியக்ஷமுதலிய லௌகிக) பிரமாணங்களால் விஷயமாகாமை எதுவோ, அஃது அபூர்வதையாம். ஓரோவிடத்து அவ்வத்விதீயவஸ்துவின் ஸ்வப்பிரகாசத்தன்மையும் அமேயத்தன்மை (எப்பிர

மாணத்திற்கும் விஷயமாகாமை)வடிவ ஹேதுவால் அபூர்வதை யெனப்படுகின்றது. (கச)

श्रूयमाणं तज्ज्ञानात्तत्प्राप्त्यादिप्रयोजनम् ।
फलं प्रकीर्तितं प्राज्ञैर्मुख्यं मोक्षैकलक्षणम् ॥ १५ ॥

(இ-ள்) ச. பிரகரணத்தாற் பிரதிபாதிக்கப்படும் அத்விதீயவஸ்துவின் ஞானத்தாற் கேட்கப்படுகின்ற அதன் பிராப்திமுதலிய பிரயோஜன மெதுவோ, அதனைப் பண்டிதர்கள் மோக்ஷவடிவ ஏகலக்ஷணமுடைய முக்கியமான பலமென்பர். (கரு)

वस्तुनः प्रतिपाद्यस्य प्रशंसनमथापि वा ।
निंदा तद्विपरीतस्य ह्यर्थवादः स्मृतो बुधैः ॥ १६ ॥

(இ-ள்) ரு. பிரமாணத்தினுற் பிரதிபாதிக்கப்படும் அத்விதீயவஸ்துவின் ஸ்துதி அல்லது அதனின் விபரீதமான துவைதத்தின் நிந்தை எதுவோ, அது பண்டிதர்களால் அர்த்தவாத மெனப்படுகின்றது. (கசா)

वस्तुनः प्रतिपाद्यस्य युक्तिभिः प्रतिपादनम् ।
उपपत्तिः प्रविज्ञेया दृष्टांताद्या ह्यनेकधा ॥ १७ ॥

(இ-ள்) சா. பிரகரணத்தினுற் பிரதிபாதிக்கப்படும் அத்விதீயவஸ்துவினை யுக்தியினுற் பிரதிபாதித்தல் எதுவோ, அது திருஷ்டாந்தமுதலிய அநேகவித யுக்திவடிவ உபபத்தியென்று அறியத்தக்கதாம். (கஎ)

एतल्लिंगविचारेण भवेत्तात्पर्यनिर्णयः ।
तात्पर्यं यस्य शब्दस्य यत्र सः स्यात्तदर्थकः ॥ १८ ॥

(இ-ள்) உபநிடதங்களில் இவ்வாறுவகைலிங்கங்களின் விசாரத்தினுல் உபநிடதங்கட்கு அத்வைத (பிரத்தியக பின்ன) பிரஹ்மத்தில் தாற்பரியம் எதுவோ, அதன் நிச்சயமுண்டாகின்றது. எச்சப்தத்திற்கு எவ்வர்த்தத்தில் தாற்

பரியமுளதோ அஃது அச்சப்தத்தின் அர்த்தமாகின்றது. மற்றையது (கேவலவாச்சியார்த்தம்) ஆகாது. (கஅ)

मंदानां श्रुतिसंसिद्धा मानसंशयनुत्तये ।
करोम्यवनिनिक्षिप्तनिधिवल्लिंगकीर्तनम् ॥ १९ ॥

(இ-ள்) மந்தர்கட்கு "வேதாந்தங்களினது அத்விதீயப் பிரஹ்மத்தில் தாற்பரியத்தின் நிச்சயவடிவ" சிரவணத்தின் சித்தியினால் "வேதாந்தங்கள் அத்வைதப்பிரஹ்மத்தைப் பிரதிபாதிப்பனவா? அல்லது வேறு அர்த்தத்தினைப் பிரதிபாதிப்பனவா?" என்னும் ஞானவடிவ பிரமாண சம்சயத்தினது நாசத்தின்பொருட்டுப் பூமியில் புதைக்கப்பட்டுள்ள நிதியினைச் சித்தித்ததாகக் கூறுவதுபோல யான் லிங்கங்களைக் கீர்த்திக்கின்றேன். (கசு)

तत्त्वालोके विशेषोपि विचारस्तदद्शनात् ।
मया त्वेषां समासेन क्रियते दिक्प्रदर्शनम् ॥ २० ॥

(இ-ள்) தத்துவாலோகமென்னும் நூலில் ஆநந்தகிரி ஸ்வாமிகளால் லிங்கங்களின் விசேஷவிசாரம் செய்யப்பட்டுளதாயினும், அந்நூல் காணப்படாமையின், என்னால் இந்தலிங்கங்களின் திசையினைக் காட்டுதல்மாத்திரம் சுருக்கமாகச் செய்யப்படுகின்றது. (உ0)

सर्वेषूपनिषद्ग्रंथेषूपासनमनेकधा ।
ज्ञानविशेषं तु तज्ज्ञेयं चित्तशुद्धिकरं यतः ॥ २१ ॥

(இ-ள்) எல்லாவுபநிஷதங்களிலும் அநேகவித உபாசனம் (தியானம்) சொல்லப்பட்டிருக்கின்றது. அதுவோ ஞானத்தின் சேஷம் (உபகாரகம்) என்று அறியத்தக்கதாம்; ஏதனாலெனின், சித்தசுத்தியைத் தருவதாயிருத்தலின்; ஆதலால் உபநிஷதங்களிலுள்ள உபாசனாபாகத்தின் லிங்கங்களை வேறாக விசாரித்தலின் உபயோகமின்மையின் அது இங்குச் செய்யப்படவில்லை. (உக)

உபோத்காதகீர்த்தனமென்னும்
முதற்பிரகரணம்
முடிந்தது.

## உ. ஈசாவாஸ்யோபநிஷத்லிங்ககீர்த்தனம்.

ईशावास्यमुपक्रम्योपसंहारः स पर्यगात् ।
अनेजदेकमित्याद्योऽभ्यासस्तस्याद्वयस्य च ॥ १ ॥

(இ-ள்) க. "ईशावास्यमिदँ सर्वं (ஈசுவரனால் இவ்வெல்லா ஜகத்தும் மறைக்கத்தக்கதாம்)" என்று முதல் மந்திரத்தினால் உபக்கிரமம் செய்து, "स पर्यगाच्छुक्र (அது நாற்புறத்தும்சென்றது சுத்தமாம்.)" என்னும்(அ-வது)மந்திரத்தால் உபசங்காரமாம். உ. "अनेजदेकं मनसो जवीयो (அசஞ்சலம், ஏகம், மனதினும் வேகமுடையது)" (ச) என்பது முதலியன அர்த்தவடிவ அவ்வத்வைதத்தின் அப்பியாசமாம். இங்கு முதலியவென்னும் சப்தத்தினால் "तदंतरस्य सर्वस्य (அஃது இவ்வெல்லாவற்றின் உள்ளாம்.)" என்னும் (ரு) மந்திரம் கொள்ளப்படும். (க)

नैनद्देवा अपूर्वत्वं फलं मोहाद्यभावकम् ।
कुर्वन्नित्यनुवाद्येवासूर्या भेदविनिंदनम् ॥ २ ॥

(இ-ள்) ங. "नैनद्देवा आप्नुवन्पूर्वमर्शत् (இதனை தேவர்களாகிய இந்திரியங்கள் அடையவில்லை. அது பூர்வம் (முன்) சென்றது.)" என்னும் (ச) மந்திரத்தினால் உபநிஷதங்களின் வேறான பிரமாணங்கட்கு விஷயமாகாமைவடிவ அபூர்வதை சொல்லப்பட்டிருக்கிறது. ச. "तत्र को मोहः कः शोक एकत्वमनुपश्यतः (அங்கு ஒருமையைக் காண்பவனுக்கு மோகம் ஏது? சோகம் ஏது?)" என்னும் (எ) மந்திரத்தினால் மோகமுதலியவற்றின் அபாவவடிவ பலம் சொல்லப்பட்டிருக்கின்றது. ரு. "कुर्वन्नेवेह कर्माणि जिजीविषेच्छतँ समाः (இங்குக் கர்மங்களைச் செய்கிறவனாய் நூறுவருஷம் ஜீவித்திருக்க விரும்புக.)" என்னும் (உ) மந்திரத்தினால் ஜீவித்தலின் இச்சையுடைய பேததரிசிக்குக் கர்மஞ்செய்தலின் அநுவாதத்

தினைச்செய்தே, பின் "असूर्या नाम ते लोका: (அவ்வசுரர்களின் லோகம் பிரசித்தமாம்.)" என்னும் (௩) மந்திரத்தால் பேத ஞானத்தின் நிந்தையும், அர்த்தத்தினால் அபேதஞானத் தின் ஸ்துதிவடிவமுமான அர்த்தவாதம் சொல்லப்பட்டிருக் கிறது. (௨)

तस्मिन्नपो मातरिश्वेत्युपपत्तिः प्रदर्शिता ।
एतैरीशोपनिषदोऽद्वैते तात्पर्यमिष्यते ॥ ३ ॥

(இ-ள்) ௪, "तस्मिन्नपो मातरिश्वा दधाति (அஃது உள்ளதாக வாயு ஜலத்தைத் தரிக்கின்றது)" என்னும் (௪) மந்திரத்தினால் உபபத்தி (அபேதபோதனத்தின் யுக்தி) காட்டப்பட்டுளது. இந்த லிங்கங்களால் ஈசாவாசியவுபநிஷத்திற்கு அத்வைதப்பிரஹ்மத்தில் தாற்பரியம் அங்கீகரிக்கப் படுகின்றது. (௩)

ஈசாவாஸ்யோபநிஷத்லிங்ககிர்த்தனமென்னும்
இரண்டாம்பிரகரணம்
முடிந்தது.

---

## ௩. கேனோபநிஷத்லிங்ககிர்த்தனம்:

श्रोत्रस्येत्याद्युपक्रम्य प्रतिबोधादिवाक्यतः ।
उपसंहार एवोक्तस्तदैक्यं ज्ञायते बुधैः ॥ १ ॥

(உரை) க, "श्रोत्रस्य श्रोत्रं (சுரோத்திரத்தின் சுரோத்திரமாம்)" என்றல் முதலிய க-வது கண்டத்தி உ-வது வாக்கியத்தினால் உபக்கிரமம் செய்து, "प्रतिबोधविदितं (போதங்கள்தோறும் அறியப்படுவதாம்.)" என்றல் முதலிய (௨, ௧௨-வது) வாக்கியத்தினால் உபசங்காரமே சொல்லப்பட்டிருக்கின்றது. இவ்விரண்டின் ஏகத்துவம் (ஒருமை) பண்டிதர்களால் அறியப்படுகின்றது. (க)

तदेव ब्रह्म त्वं विद्धीत्याद्यभ्यास उदीरितः ।
न तत्रेत्याद्यपूर्वत्वं प्रेत्यास्मादिति वै फलम् ॥ २ ॥

(உரை) உ. "तदेव ब्रह्म त्वं विद्धि (அதனையே நீ பிரஹ்மமென்றறி.)" என்றல் முதலிய (க, ச—அ-வது) வாக்கியங்களால் அப்பியாசம் சொல்லப்பட்டிருக்கின்றது. ஙு. "न तत्र चक्षुर्गच्छति (அதில் சக்ஷுஸ் (நேத்திரம்) செல்லுகிறதில்லை.)" என்றல் முதலிய (க, ங-வது) வாக்கியத்தினால் உபநிஷதங்களின் வேறான பிரமாணத்திற்கு விஷயமாகாமைவடிவ அபூர்வதை சொல்லப்பட்டிருக்கின்றது. ச. "भूतेषु भूतेषु विचित्य धीराः (தீரர்கள் பூதங்கள்தோறும் அறிந்து,)" என்று ஆத்மஞானத்தினை அநுவதித்து, "प्रेत्यास्माल्लोकादमृता भवन्ति (இந்த லோகத்தினின்றும் தேகப்பிராணவியோகத்தினையடைந்து அமிருதராகின்றனர்.)" என்று (ங, ரு-வதில்) பிரசித்த பலம் சொல்லப்பட்டிருக்கின்றது. (உ)

ब्रह्म हेत्याद्यर्थवादोऽविज्ञातमिति चांतिमम् ।
एतैः केनोपनिषदोऽद्वैते तात्पर्यमिष्यते ॥ ३ ॥

(உரை) ரு. "ब्रह्म ह देवेभ्यो विजिग्ये (பிரஹ்மம் தேவர்களின் பொருட்டு விஜயத்தினைக் கொடுத்தது.)" என்றல் முதலிய இவ் (ங, க-வது) வாக்கியங்களால் ஆக்கியாயிகைவடிவ அர்த்தவாதம் சொல்லப்பட்டிருக்கின்றது. சு. "यस्यामतं तस्य मतं (எவனுக்கு அஞ்ஞாதமோ (அறியப்படாததோ) அவனுக்கு ஞாதமாம் (அறியப்பட்டதாம்.)" என்றல் முதலியவடிவ இந்த (உ, ங-வது) ஸ்வயம்பிரகாச அத்வைதவஸ்துவின் சாதகவாக்கியங்களால் கடைசி அதாவது உபபத்தி (தர்க்கமயயுக்தி) வடிவ ஆறுவது லிங்கம் சொல்லப்பட்டிருக்கின்றது. இந்தலிங்கங்களால் கேநோபநிஷத்

திற்கு அத்வைதப்பிரஹ்மத்தில் தாற்பரியம் அங்கீகரிக்கப் படுகின்றது. (௩)

கேனோபநிஷத்கீர்த்தனமென்னும்
மூன்றும்பிரகரணம்
முடிந்தது.

---

## ௪. கடோபநிஷத்லிங்ககீர்த்தனம்.

येयं प्रेते मनुष्ये त्वित्यादिः सामान्यतस्तथा ।
अन्यत्र धर्मतस्त्वित्या–दिवाक्याच्च विशेषतः ॥ १ ॥

(உரை) க. "येयं प्रेते विचिकित्सा मनुष्ये (இறந்த மனுஷ்யனிடத்து யாதொரு இச்சம்சய முளதோ,)" என்றல் முதலியன (க, க, உ௦) சாமானியமாக உபக்கிரமமும். அவ்வாறே, "अन्यत्र धर्मादन्यत्राधर्मादन्यत्रास्मात्कृताकृतात् (தர்மத்தின் வேறானதும், அதர்மத்தின் வேறானதும், இக் காரியகாரணங்களின் வேறானதுமாம்.)" என்றல் முதலிய (க, உ, கச.) வாக்கியத்தினால் விசேஷமாக. (க)

उपक्रमोंऽगुष्ठमात्र इत्यारभ्योपसंहृतिः ।
न जायतेऽशरीरं च नित्यानां नित्य एव सः ॥ २ ॥

(உரை) "अंगुष्ठमात्रः पुरुषोंतरात्मा உபக்கிரமமும், அங்குஷ்டமாத்திர (பெருவிரலளவுடைய) புருஷன் அந்தராத்மா.)" என்று ஆரம்பித்து, இந்த (உ, ௬, கஎ) வாக்கியத்தினால் உபசங்காரமும் சொல்லப்பட்டிருக்கின்றது. உ. "न जायते म्रियते वा (பிறக்கிறதில்லை; இறக்கிறதில்லை.)" (க, உ, கஅ) என்பதும், "अशरीरँ शरीरेष्वनवस्थेष्ववस्थितम् அஸ்திரமான சரீரங்களில் நிலைத்துள்ள அசரீரத்தினை" (க, உ, உக) என்பதும், "नित्यो नित्यानां (அது நித்தியங்கட்கு நித்தியமாம்)" (உ, ௫, கங) என்பதும். (உ)

चेतनश्चेतनानां च बहूनामेक एव च ।
अस्तीत्येवोपलब्धव्य इत्याद्यभ्यास ईरितः ॥ ३ ॥

(உரை) "चेतनश्चेतनानामेको बहूनां विदधाति कामान् (சேதனங்கட்குச் சேதனமாய். வெகுவாயுள்ளவற்றினிடையில் ஏகமாய்க் காமங்களைச் செய்கின்றது.)" (உ, ரு, கங) என்பதும், "अस्तीत्येवोपलब्धव्य (இருக்கிறது என்றே அறியத்தக்கதாம்.) (உ, ௬, கங) என்பதுமாகிய இவைமுதலிய வெகுவாக அப்பியாசம் சொல்லப்பட்டிருக்கிறது. (ங)

नैव वाचा न मनसेत्याद्यपूर्वत्वमिंगितम् ।
मृत्युप्रोक्तां त्वेवमाद्यात्फलं श्रुत्या समीरितम् ॥ ४ ॥

(உரை) க. "नैव वाचा न मनसा प्राप्तुं शक्यो न चक्षुसा (வாக்கினாலும் அறியக்கூடியதன்று; மனதினாலுமன்று; சக்ஷுஸினாலுமன்று.)" (உ, ௬, கஉ) என்றல் முதலிய அபூர்வதை கொள்ளப்பட்டுளது. உ. "मृत्युप्रोक्तां नाचिकेतोऽथ लब्ध्वा विद्यामेतां योगविधिं च कृत्स्नम् । ब्रह्म प्राप्तो विरजोऽभूद्विमृत्युरन्योप्येवं यो विद्ध्यात्ममेव (பின் நசிகேதா யமனாற் சொல்லப்பட்ட இவ்வித்தையினையும் சம்பூர்ணயோகவிதியினையும் பெற்று, பிரஹ்மத்தினையடைந்தவனாய், நிர்மலனாய், மரணமின்றியவனானன். பிறனும் எவன் அத்யாத்மத்தினையே அறிகின்றானோ, அவன் இவ்வாறு ஆவான்.)" என்னும் (உ, ௬, க௮) இவை முதலிய வாக்கியங்களால் சுருதியில் பலம் செவ்வையாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது.

स लब्ध्वा मोदनीयं वै फलं प्रोक्तं स्फुटं तथा ।
ब्रह्म क्षत्रं च युगलमोदनं त्वेवमादितः ॥ ५ ॥

(உரை) "स मोदते मोदनीयं हि लब्ध्वा (அவன் மோதவடிவத்தால் அநுபவஞ் செய்யத்தக்கதனையடைந்து மோதத்தினைப்பெறுகின்றான் (களிக்கின்றான்.)" என்னும் (க, உ, கங)

என்னும் வாக்கியத்தினால் இவ்வாறு இதுவும் ஸ்பஷ்ட பல மாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. ௫. "यस्य ब्रह्म च क्षत्रं च उभे भवत ओदनं (எதற்குப் பிராஹ்மணனும் க்ஷத்திரியனு மாகிய இருவரும் ஓதனம் (உணவு) ஆகின்றனரோ" என் னும் (௧, ௨, ௨௪) இவை முதலிய வாக்கியத்தினால், (௫)

अर्थवादश्च युक्तिर्वै त्वग्निरित्यादिवाक्यतः ।
एभिः कठोपनिषदोऽद्वैते तात्पर्यमिष्यते ॥ ६ ॥

(உரை) அத்வைதப் பிரஹ்மத்தின் ஸ்துதிவடிவ அர் த்தவாதம் சொல்லப்பட்டிருக்கின்றது. அவ்வாறே "मृत्योः स मृत्युमाप्नोति य इह नानेव पश्यति (எவன் இங்கு நாநாவைப்போல காண்கின்றானோ அவன் மிருத்தியுவினின்று மிருத்தியுவை யடைகின்றான்.)" (௧, ௪, ௧௦) என்பதும் (௧, ௪, ௧௧) என் பதுமான வாக்கியங்களால் பேதஞானத்தின் நிந்தைவடிவ அர்த்தவாதம் சொல்லப்பட்டிருக்கின்றது. அதுவும் च என் னும் சப்தத்தினால் சூசிக்கப்பட்டுளது. ௬. "अग्निर्यथैको भुवनं प्रविष्टो रूपं रूपं प्रतिरूपो बभूव (எப்படி அக்கினி ஒன்றே புவனத்திற் பிரவேசித்ததாய் ரூபங்கள்தோறும் பிரதிரூப மாயிற்றோ,)" (௨, ௫, ௯-௧௧) என்றல் முதலிய மூன்று மந்திர வடிவவாக்கியங்களாலும், च காரத்தால் 'येन रूपं रसं गंधं (எத னால் ரூபத்தினை ரஸத்தினை கந்தத்தினை அறிகின்றானோ,)' என்பது (௨, ௪, ௩) முதலிய அநேகவாக்கியங்களாலும் யுக்தி சப்தத்தின் வாச்சியமான உபபத்தி சொல்லப்பட்டி ருக்கின்றது. இந்தலிங்கங்களால் கடவல்லியுபநிஷத்திற்கு அத்வைதப்பிரஹ்மத்தில் தாற்பரியம் அங்கீகரிக்கப்பட்டி ருக்கின்றது. (௬)

கடவல்லியுபநிஷத்லிங்கநிர்த்தனமென்னும்
நான்காம்பிரகரணம்
முடிந்தது.

## ௫. பிரசிநோபநிஷத்லிங்ககீர்த்தனம்.

ब्रह्मपरा हि वै ब्रह्म-निष्ठा इत्युपक्रम्य तत् ।
तान्होवाचैतावदेवो-पसंहारस्तदेकता ॥ १ ॥

(உரை) க. "ब्रह्मपरा ब्रह्मनिष्ठा परं ब्रह्मान्वेषमाणाः (பிரஹ்மத்தில் தற்பரரான பிரஹ்மநிஷ்டர்கள் பரப்பிரஹ்மத்தினைத் தேடுகின்றவர்களாய்)" (க-வது பிரசினம், க-வது வாக்கியம்) என்று அந்தப் பரப்பிரஹ்மத்தினையே உபக்கிரமஞ்செய்து, "तान्होवाचैतावदेवाहमेतत्परं ब्रह्म वेद नातः परमस्ति (அவர்களுக்குச் சொல்லலாயினார்:—இவ்வளவே நான் இப் பரப்பிரஹ்மத்தினை அறிகிறேன்; இதனின் வேறொன்று இல்லை)" (௬, எ) என்னும் வாக்கியத்தினால் இவ்வாறு உபசங்காரமாம். இவ்விரண்டற்கும் ஒருலிங்கவடிவத்துவமுளது. (க)

एतद्वै सत्यकामेति यत्तदभ्यास उच्यते ।
इहैवांतः शरीरे तु सोम्य ! चेत्याद्यपूर्वता ॥ २ ॥

(உரை) உ. "एतद्वै सत्यकाम ! परं चापरं च यदोंकारः (சத்தியகாமனே ! இந்நிச்சயத்தினால் பரப்பிரஹ்மமும் அபரப்பிரஹ்மமாம், எது ஓங்காரமாமோ,)" (௫, உ) என்றும், "यत्तच्छांतमजरममृतमभयं परं च (எதுவோ அது சாந்தமும், அஜரமும், அமிருதமும், அபயமும், பரப்பிரஹ்மமுமாம்)" (௫, எ) என்றும் அப்பியாசம் சொல்லப்படுகின்றது. ௩. "इहैवांतः शरीरे सोम्य ! स पुरुषो यस्मिन्नेताः षोडशकलाः प्रभवंति ஸோமியனே ! இதே சரீரத்தினுள் அப்புருஷனிருக்கின்றான், எவனிடத்தில் இப்பதினாறுகலைகளுண்டாகின்றனவோ)" என்னும் (௬, உ) வாக்கியத்தினால் சரீரத்திலிருப்பவனது உபதேசமின்றி யுபலம்பமின்மை (தோற்றாமை) வடிவ அபூர்வதை சூசிக்கப்பட்டிருக்கின்றது. (உ)

तं वेद्यं पुरुषं वेदेत्यादितः फलमुच्यते ।
तदच्छायमदेहं वे-त्यादिभिः कथिता स्तुतिः ॥ ३ ॥

(உரை) ௪. "तं वेद्यं पुरुषं वेद यथा मा वो मृत्युपरि व्यथा इति (அந்த வேத்திய புருஷனை எவ்வாறிருக்கின்றனோ, அவ்வாறு அறிக. உங்களுக்கு மிருத்தியுவின் பீடையுண்டாகலாகாது இவ்வாறு)" என்பது (௬, ௫) முதலிய வாக்கியத்தால் பலம் சொல்லப்பட்டிருக்கிறது. ௫. "तदच्छायमशरीरमलोहितं शुभ्रमक्षरं वेदयते यस्तु सोम्य ! स सर्वज्ञः सर्वो भवति (ஸோமியனே! யாவனொருவன் அந்த அஞ்ஞானமின்றியதும் அசரீரமும், செம்மையில்லாததும், சுத்தமுமான அக்ஷரத்தினை அறிகின்றனோ, அவன் சர்வஞ்ஞனும் எல்லாமுமாகின்றான்" என்பது (௪, ௰) முதலியவாக்கியங்களால் அர்த்தவாதரூபஸ்துதி சொல்லப்பட்டிருக்கின்றது. ()

नदीसमुद्रदृष्टांतादुपपत्तिः प्रदर्शिता ।
एतैः प्रश्नोपनिषदोऽद्वैते तात्पर्यमिष्यते ॥ ४ ॥

(உரை) ௬. "स यथेमा नद्यः (அஃது எப்படி இந்த ஆறுகள்)" என்பது (௬, ௫) முதலிய (௬, ௬) வாக்கியத்துள்ள திருஷ்டாந்தத்தினால் பரமாத்மாவினின்று பதினாறு கலைகளின் உற்பத்தியாதல் நாசமாதலென்பவற்றின் உபந்நியாசத்தால் உபபத்தி காட்டப்பட்டிருக்கின்றது. இந்தலிங்கங்களால் பிரசினோபநிஷத்திற்கு அத்வைதப்பிரஹ்மத்தில் தாற்பரியம் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. (௪)

பிரசினோபநிஷத்லிங்ககீர்த்தனமென்னும்

ஐந்தாம்பிரகரணம்

முடிந்தது.

## ௬. முண்டகோபநிஷத்லிங்ககீர்த்தனம்.

अथ परेत्युपक्रम्य यो ह वै परमं च तत् ।
ब्रह्म वेदेत्यादिवाक्यादुपसंहार ईरितः ॥ १ ॥

(உரை) ௧. "अथ परा यया तदक्षरमधिगम्यते यत्तदद्रेश्यं இப்போது பராவித்தை சொல்லப்படுகின்றது. எதனால் அவ்வக்ஷரம் அறியப்படுகின்றதோ, யாதொரு அஃது அதிருசியமாம்.)" என்பது (௧, ௧, ௫—௬) முதலிய வாக்கியத்தால் உபக்கிரம் செய்து, "स यो ह वै तत्परमं ब्रह्म वेद(அவன் எவன் அந்தப்பரமப்பிரஹ்மத்தினை அறிகின்றானோ,)" என்பது (௩, ௨, ௯) முதலியவாக்கியத்தினால் உபசங்காரம் சொல்லப்பட்டிருக்கின்றது. (௧)

आविः सन्निहितं चेति तदेतदक्षरं त्विति ।
अभ्यासो गृह्यते नैव चक्षुषेत्याद्यपूर्वता ॥ २ ॥

(உரை) ௨. "आविः सन्निहितं (பிரத்தியக்ஷமாம்; சமீபித்ததாம்.)" (௨, ௨, ௧) என்றும், "तदेतक्षरं ब्रह्म(அந்த இஃது அக்ஷரவடிவப்பிரஹ்மமாம்.)" (௨, ௨, ௨) என்றும் அப்பியாசம் சொல்லப்பட்டிருக்கின்றது.

௩. "न चक्षुषा गृह्यते नापि वाचा (சக்ஷுவினால் கிரகிக்கப்படுகிறதில்லை. வாக்கினாலுமில்லை)" என்பதுமுதலிய வடிவ (௩, ௧, ௮) வாக்கியத்தின் அர்த்தவடிவ அபூர்வதை யுளது. (௨)

भिद्यते हृदयग्रंथिरित्याद्यात्फलमीरितम् ।
यं यं लोकं च हेत्याद्यैरर्थवादः प्रघोषितः ॥ ३ ॥

(உரை) ௪. "भिद्यते हृदयग्रंथिः (அப்பராவாத்தினை அறிந்தபோது இருதயக்ரந்தி பேதிக்கின்றது.)" என்பது (௨, ௨, ௮) முதலிய (௩, ௨,௮—௯) வாக்கியத்தினால் பலம்

சொல்லப்பட்டிருக்கின்றது. ங. "यं यं लोकं मनसा संविभाति विशुद्धसत्त्वः कामयते यांश्च कामान् तं तं लोकं जायते तांश्च कामां-स्तस्मादात्मज्ञं ह्यर्चयेद्भूतिकामः (பரிசுத்தமனதுடையவன் எந்தெ ந்தலோகத்தினை மனதினால் சிந்திக்கின்றானோ, எந்தபோகங் களைவிரும்புகின்றானோ, அந்தந்தலோகத்தினையும், அந்தப் போகங்களையும் அடைகின்றான். அதனால் விபூதியினை விரும்புகிறவன் ஆத்மஞானியினைப் பூஜிக்கக்கடவன்.)" என் பது (ங, க, க0) முதலிய வாக்கியத்தினால் அர்த்தவாதம் சொல்லப்பட்டிருக்கிறது. (ங)

सुदीप्ताग्नेर्यथेत्यादि-नोपपत्तिः प्रकाशिता ।

एतैर्मुंडकतात्पर्यमद्वैतेऽङ्गीकृतं बुधैः ॥ ४ ॥

(உரை) ச. "यथा सुदीप्तात्पावकाद्विस्फुलिंगाः सहस्रशः प्रभवंते सरूपाः । तथाऽक्षराद्विविधाः सोम्य ! भावाः प्रजायंते तत्र चैवापियंति (எப்படிமிகுந்தெரிகின்ற அக்கினியினின்றும் ஆயி ரக்கணக்கான ஸமானவடிவ பொரிகள் உற்பத்தியாகின்ற னவோ, அதுபோல ஸோமியனே! அக்ஷரத்தினின்றும் பல வகைப் பதார்த்தங்கள் உற்பத்தியாகின்றன. அதிலேயே ஒடுங்குகின்றன)." என்பது (உ, க, க) முதலிய வாக்கியத் தால் உபபத்தி விளக்கப்பட்டிருக்கின்றது. இந்த லிங்கங் களால் முண்டகோபநிஷத்திற்கு அத்வைதத்தில் தாற்பரியம் பண்டிதர்களால் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. (ச)

முண்டகோபநிஷத்லிங்ககீர்த்தனமென்னும்

ஆறும்பிரகரணம்

முடிந்தது.

## ஏ. மாண்டூக்யோபநிஷத்லிங்ககீர்த்தனம்.

ओमित्येतदुपक्रम्यामात्र इत्युपसंहृतिः
प्रपंचोपशमं शांतमित्याद्यभ्यास ईरितः ॥ १ ॥

(உரை) க. "ओमित्येतदक्षरमिदं सर्वं (இவ்வெல்லாம் ஓம் என்னும் இவ்வக்ஷரமாம்.)" என்னும் (க) வாக்கியத்தினால் உபக்கிரமம் செய்து, "अमात्रश्चतुर्थो (அமாத்திர வடிவினது நான்காவது பாதம்)" என்றல் முதலிய வடிவ (கஉ) வாக்கியத்தினால் உபசங்காரமாம். உ. "प्रपंचोपशमंशांतं (நிஷ்பிரபஞ்சமும சாந்தமுமாம்)" (கஉ) இது முதலிய அப்பியாஸம் சொல்லப்பட்டிருக்கின்றது. (க)

अदृष्टमाद्यपूर्वत्वं संविशत्यात्मना फलम् ।
अवांतरफलोक्तिस्तु ह्यर्थवादो विदां मते ॥ २ ॥

(உரை) ௩. "अदृष्टमव्यवहार्यं (காணப்படாததும் வியவகரிக்கப்படாததுமாம்.)" (எ) என்றல் முதலியன பிரமாணாந்தரத்திற்கு விஷயமாகாமைவடிவ அபூர்வதையாம். ச. "संविशत्यात्मनात्मानं य एवं वेद (ஆத்மாவினை எவன் இவ்வாறு அறிகின்றானோ ஆத்மாவோடு ஆத்மாவினைப் பிரவேசிக்கின்றான் (செவ்வையாய் அடைகின்றான்) என்னும் (கஉ) வாக்கியத்தினால் பலம் சொல்லப்பட்டிருக்கின்றது. ரு. "आप्नोति ह वै सर्वान् कामान् (சர்வகாமங்களையும் அடைகின்றான்.)" என்பது (க) முதலிய (க0) வாக்கியங்களால் அவாந்தர பலத்தைக் கூறுதல் எதுவோ அது வித்வான்களது மதத்தில் பிரசித்த அர்த்தவாதமாம். (உ)

अद्वैते च प्रवेशायो-पपत्तिः पादकल्पना ।
मांडूक्योपनिषद्भाव एवेमैरिष्यतेऽद्वये ॥ ३ ॥

(உரை) சு. அத்வைதப்பிரஹ்மத்தில் பிரவேசத்தின் பொருட்டு (க-கஉ வது வாக்கியபரியந்தம் நான்கு பாதங்

களின் கற்பனை எதுவோ அது உபபத் (யுக்தி)யாம். இந்த லிங்கங்களால் மாண்டூக்யோபநிஷத்திற்கு அத்வைதப் பிரஹ்மத்தில் தாற்பரியம் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. ()

மாண்டூக்யோபநிஷத்லிங்ககீர்த்தன மென்னும்

ஏழாம்பிரகரணம்

முடிந்தது.

---

## அ. தைத்திரீயோபநிஷத்லிங்ககீர்த்தனம்.

ब्रह्मविदित्युपक्रम्य यश्चायं तूपसंहृतिः ।
तस्माद्वा इत्यथो वाक्यं यदा ह्येवेति चापरम् ॥ १ ॥

(உரை) க. "ब्रह्मविदाप्नोति परं(பிரஹ்மவித்து(பிரஹ்ம ஞானி) பரப்பிரஹ்மத்தினை அடைகின்றான்)" (உ, க) என்று உபக்கிரமம் செய்து, "स यश्चायं पुरुषे यश्चासावादित्ये । स एकः (அவன் யாதொரு இவன் புருஷனிடத்திருக்கின்றானோ, யாதொரு இவன் சூரியனிடத்திலிருக்கின்றானோ, அவன் ஏகன்.)" என்றல் முதலியவடிவ (உ, அ) வாக்கியத்தினால் உபசங்காரமாம். உ. "तस्माद्वा एतस्मादात्मन आकाशः संभूतः (அந்த இவ்வாத்மாவினின்று ஆகாசமுண்டாயிற்று)" (உ, க) என்பதும், "यदा ह्येवैष एतस्मिन्नदृश्येऽनात्म्येऽनिरुक्तेऽनिलयने (எதனால் எப்போது தான் இவன் அதிருசியமும் அநாத்மிய (அசரீர)மும், அவாச்சியமும், அநாதாரமுமான இதில்)" (உ, எ) என்னும் அபரவாக்கியமும். (க)

भीषाऽस्मादित्यथोऽस्यासौ यतो वाचो त्वपूर्वता ।
सोऽश्नुते ब्रह्मणा कामान् सहेत्यादि फलं श्रुतम् ॥ २ ॥

(உரை) "भीषाऽस्माद्वातः पवते (இப்பரமாத்மாவினின்று அச்சத்தால் வாயு வீசுகின்றது.)" (உ, அ) என்பதும் அப்பியாசமாம். ரு. "यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह (மனதோடு வாக்குகள் அடையாது எதனின்றும் திரும்புகின்றனவோ.)" என்னும் (உ, ௪) வாக்கியத்தினால் மனோவாக்குகளாலுபலக்ஷிக்கப்பட்ட சகல பிரமாணங்கட்கும் விஷயமாகாமைவடிவ அபூர்வதை சொல்லப்பட்டிருக்கின்றது. ௬. "सोऽश्नुते सर्वान् कामान् सह ब्रह्मणा विपश्चिता (அந்த ஞானி ஞானவடிவ பிரஹ்மத்தோடு ஏகமாய் எல்லாக் காமங்களையும் புசிக்கின்றான்.)" என்பது (உ, ௧) முதலிய (உ-வது வல்லி, எ-வது அநுவாக) வாக்கியங்களால் பலம் சொல்லப்பட்டிருக்கின்றது. (உ)

अर्थवादोंतरं कुर्यादुदरं भेदनिन्दनम् ।
गायत्यास्ते हि सामैतदित्यादिर्विदुषः स्तुतिः ॥ ३ ॥

(உரை) ௭. "यदुदरमंतरं कुरुते अथ तस्य भयं भवति (எவன் சிறிதேனும் பேதத்தினைச் செய்கின்றானோ, பின் அவனுக்குப் பயமுண்டாகின்றது)" (உ, எ) என்பது பேதத்தின் நிந்தையாம். "एतत्साम गायन्नास्ते अहमन्नमहमन्नमहमन्नम् । अहमन्नादोऽहमन्नादोऽहमन्नादः (வித்வான் இந்த ஸாமத்தினைக் காயனம் செய்கின்றவனாயிருக்கின்றான்:— யான் (சர்வ) போக்கியம்; யான் போக்கியம்; யான் போக்கியம், யான் (சர்வ) போக்தா; யான் போக்தா; யான் போக்தா.)" (௩, ௧0) இவை முதலியன வித்வானது ஸ்துதியாம். அஃது அர்த்தவாதம்.) (௩)

यतो भूतानि जायंते तत्सृष्ट्वेत्यादितोलिमम् ।
तैत्तिरीयश्रुतेर्भाव एवमैरिण्यतेऽद्वये ॥ ४ ॥

(உரை) ௮. "यतो वा इमानि भूतानि जायन्ते (எதனின்று இப்பூதங்களுண்டாகின்றனவோ)" (௩, ௧) என்

பதும், “ तत्सृष्ट्वा तदेवानुप्राविशत् (அதனைச்சிருஷ்டித்து அதிலேயே பிரவேசித்தார்)” என்பதுமான (௨, ௬) இவை முதலிய காரியகாரணங்களின் அபேதத்தினைப் போதிக்கும் சிருஷ்டிவாக்கியத்தினாலும், பிரவேசிப்பவன், பிரவேசம், பிரவேசிக்கப்படுவது என்பவற்றின் அபேதத்தைப் போதிக்கும் பிரவேசவாக்கியத்தினாலும் கடைசியான உபபத்தி வடிவ லிங்கம் சொல்லப்பட்டிருக்கின்றது. இவ்விலிங்கங்களால் தைத்திரீயோபநிஷத்திற்கு அத்வைதப் பிரஹ்மத்தில் தாற்பரியம் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. (௪)

தைத்திரீயோபநிஷத்லிங்ககீர்த்தனமென்னும்

எட்டாம்பிரகரணம்

முடிந்தது.

---

## ௯. ஐதரேயோபநிஷத்லிங்ககீர்த்தனம்.

आत्मा वा इत्युपक्रम्योपसंहरस्तु चान्तिमे ।
प्रज्ञानं ब्रह्म वाक्येन महतोक्तो हि धीधनैः ॥ १ ॥

(உரை) ௧. “ आत्मा वा इदमेक एवाग्र आसीत् (இது முன் ஒரு ஆத்மாகவே இருந்தது.)” (௧, ௧, ௧) என்று உபக்கிரமஞ்செய்து, “ प्रज्ञानं ब्रह्म (பிரஞ்ஞானம் பிரஹ்மம்)” என்னும் கடைசியான மூன்றுவதத்தியாயத்திலுள்ள ௫-வது கண்டிகையின் ௩-வது ருக்கிலுள்ள மகாவாக்கியத்தினால் புத்திமான்களால் பிரசித்தமான உபசங்காரம் சொல்லப்பட்டிருக்கின்றது. (௧)

स इमानसृजल्लोकान्स ईक्षत-सृजा इति ।
तस्मादिदन्द्र इत्यादिवाक्यैरभ्यास ईरितः ॥ २ ॥

(உரை) ௨. “ स इमाल्लोकानसृजत (அவர் இந்த லோகங்களைச் சிருஷ்டித்தார்.)” (௧, ௧, ௨) என்பதும்,

"स ईक्षतेमे नु लोका लोकान्नु सृजा इति (அவர் ஈக்ஷணம் செய்தார்:—இவை லோகங்கள், லோகபாலர்களைச் சிருஷ்டிப்பேனாக)" (க, க, ரு) என்பதும், "तस्मादिदंद्रो नाम அதனால் இதந்திரன் என்று பெயராம்.)" (க, ௩, கச) என்பதுமான இவை முதலியவாக்கியங்களால் அப்பியாசம் சொல்லப்பட்டிருக்கின்றது. (உ)

स जात इत्यपूर्वत्वं प्रज्ञानेत्रं तदित्यपि।
स एतेनेतिवाक्येन फलं स्पष्टमुदीरितम् ॥ ३ ॥

(உரை,) ௩. "स जातो भूतान्यभिव्यैक्षत (அவர் வெளிப்பட்டவராய் பூதங்களை ஸ்பஷ்டமாய்ப் பார்த்தார்.)" (க, ௩, கரு) என்னும் வாக்கியத்தினால் சர்வபூதங்களையும் விளக்குவதாயிருத்தலால் அவற்றிற்கு விஷயமாகாமைவடிவ, அல்லது "सर्वं तत्प्रज्ञानेत्रं (அவ்வெல்லாம் பிரஞ்ஞையாகிய ஸ்வப்பிரகாச சைதன்யத்தினை நேத்திரமாக (நிர்வகிப்பதாக) வுடையனவாம்.)" என்னும் ௩-வது அத்தியாயம், ரு-வது கண்டத்தின் ௩-வது வாக்கியத்தினால் இத்தன்மைய ஸ்வப்பிரகாசவடிவ அபூர்வதை சொல்லப்பட்டிருக்கின்றது.

ச. "स एतेन प्रज्ञेनाऽऽत्मनाऽऽस्माल्लोकादुत्क्रम्यामुष्मिन् स्वर्गे लोके सर्वान्कामानाप्त्वाऽमृतः समभवत् समभवत्। इत्योम् ॥ (அவன் இந்த ஞான ஸ்வரூபத்தினால் இவ்வுலகத்தினைக்கடந்து அந்த மோக்ஷமாகிய லோகத்தில் சர்வகாமங்களையும் அடைந்து அமிருதனான்; ஆனான். இவ்வாறு சத்தியமாம்.)" (௩, ரு, ச) என்னும் வாக்கியத்தினால் ஸ்பஷ்டமாக பலம் சொல்லப்பட்டிருக்கின்றது. (௩)

ता एता देवताः सृष्टास्तथा गर्भे नु सन्निति।
स्तुतिभिर्युक्तिस्तु स इमानित्यारभ्य विदार्य सः ॥ ४ ॥

एतं सीमानमित्यादिश्रुतिवाक्यात्प्रकीर्तिता ।
इमैरुक्तैस्तु षड्लिंगैरैतरेयश्रुतौ गतम् ॥ ५ ॥

तात्पर्यं ज्ञायतेऽद्वैते तन्निष्ठैर्वेदपारगैः ।
तथा मुमुक्षुभिः सर्वैरपि विज्ञेयमादरात् ॥ ६ ॥

(உரை) ௫. "ता एता देवताः सृष्टाः (அந்த இவ்வுண்டாக்கப்பட்ட தேவதைகள் ஸ்துதிசெய்தன.)" (க, உ, க) என்பதும், "गर्भे नु सन्नन्वेषामवेदमहं देवानां जनिमानि विश्वा (மாதாவின் கர்ப ஸ்தானத்திலேயே இருப்பவனும், யான் இத்தேவர்களின் எல்லா ஜன்மங்களையும் அறிகின்றேன்.)" (உ, ச, ரு) என்பதுமான் அத்வைத பரமாத்மாவின் ஸ்துதிவடிவ அர்த்தவாதம் சொல்லப்பட்டிருக்கின்றது. ௬. "स इमांल्लोकानसृजत (அவர் இந்த லோகங்களைச் சிருஷ்டித்தார்.)" (க, க, உ) என்றாரம்பித்து (ச), "स एतमेव सीमानं विदार्यैतया द्वारा प्रापद्यत (அவர் இந்த சிரசிலுள்ள சீமாவினை (உச்சியினை)ப்பிளந்து இதன் வாயிலாச் சரீரத்தில் பிராப்தமானார்.)" என்றல் (க, ௩, ௧௨) முதலிய வாக்கியங்களால் சுருதி யுக்தியாகிய உபபத்தியினைக் கூறியிருக்கின்றது. கூறிய இந்த லிங்கங்களாலே ஐதரேயோபநிஷத்திலுள்ள (ரு) அத்வைதத்தில் தாற்பரியம் வேத வேதத்தின் கரைகண்டவ(சுரோத்திரிய)ர்களும், அதில் நிஷ்டையுடையவ (பிரஹ்மநிஷ்ட)ர்களுமான பெரியோர்களால் அறியப்படுகின்றது. அவ்வாறே எல்லா முமுக்ஷுக்களாலும் ஆதரவோடு அறியத்தக்கதாம். (௬)

ஐதரேயோபநிஷத்லிங்ககீர்த்தனமென்னும்

ஒன்பதாம்பிரகரணம்

முடிந்தது.

ஓம்

# கம. சாந்தோக்யோபநிஷத்லிங்ககிர்த்தனம்.

## அதில் ஆறுமத்தியாயலிங்ககிர்த்தனம்.

सदेवेत्युपक्रम्यैवै-तदात्म्यमिदमित्यतः ।
उपसंहृतिरभ्यासो नवकृत्व उदीरितः ॥ १ ॥

(உரை) க. "सदेव सोम्येदमग्र आसीदेकमेवाद्वितीयं (ஸோமியனே! சிருஷ்டிக்கு முன் ஒரே அத்விதீயசத்து தானிருந்தது.)" (சு, உ, க) என்று உபக்கிரமம் செய்து, "एतदात्म्यमिदं सर्वं (இவ்வெல்லாம் இச்சத்துவடிவ ஆத்மத் தன்மையுடையதாம்.)" என்னும் சு-வது அத்தியாயத்தின் கசு-வது கண்டிகையின் ஙு-வது வாக்கியத்தினால் உபசங்காரம் சொல்லப்பட்டிருக்கின்றது. உ. அப்பியாசம் ஒன்பது முறை சொல்லப்பட்டிருக்கின்றது. (க)

तत्त्वमसीतिवाक्यस्याऽऽवर्त्तनाद्बुद्धिमत्तमैः ।
अत्रैव सोम्य! सन्नेत्य-पूर्वोक्ता हि पंडितैः ॥ २ ॥

(உரை) "तत्त्वमसि (அது நீ)" என்னும் (சு, அ, கசு) வாக்கியத்தின் ஆவர்த்தனத்தால் பண்டிதர்களால் (சொல்லப் பட்டிருக்கிறது.) ஙு. "अत्र वाव किल सत्सोम्य! न निमालयसेऽत्रैव किलेति (இவ்வாறு ஸோமியனே! இச்சரீரத்தில் ஆசாரியனுபதேசமின்றி ஸத்வடிவ பிரஹ்மம் இருப்பதாகின்றது. அதனை இந்திரியங்களால் அறியாய். இங்கு தானே இருப்பதான சத்தினைக் குருவுபதேசவடிவ வேறு உபாயத்தாலறி.)" (சு, கங, உ) என்பது பண்டிதர்களால் குருவுபதேசமின்றிப்பிரமாணாந்தரத்திற்கு விஷயமாகாமை வடிவ பிரசித்த அபூர்வதை யாமென்று சொல்லப்பட்டிருக்கிறது. (உ)

तावदेव चिरं तस्येत्यादिवाक्यात्फलं स्मृतम् ।
तमादेशमुतामाक्ष्य इत्यादेः स्तुतिरीरिता ॥ ३ ॥

(உரை) சு. "आचार्यवान् पुरुषो वेद तस्य तावदेव चिरं यावन्न विमोक्ष्येऽथ संपत्स्ये (ஆசாரியனையுடைய புருஷன் அறிகின்றான். அந்த ஞானிக்கு அதுவரையிற்றான் விலம்பம், எதுவரையில் பிராரப்தத்தின் க்ஷயத்தால் தேகத்திற்கு அந்தமுண்டாகவில்லையோ; பின்னர் சத்ரூப பிரஹ்மத்தினை அடைகின்றான்.)" என்பது (சு, கச, உ) முதலிய வாக்கியத்தினால் பலம் சொல்லப்பட்டிருக்கின்றது. டு. "उत तमादेशमप्राक्ष्यो येनाश्रुतँ श्रुतं भवत्यमतं मतमविज्ञातं विज्ञातम् (சுவேதகேதுவே! எதனால் கேட்கப்படாதது கேட்கப்பட்டதாகுமோ, மனனஞ்செய்யப்படாதது மனனஞ்செய்யப்பட்டதாகுமோ, அறியப்படாதது அறியப்பட்டதாகுமோ, அவ்வாதேசத்தினையும் ஆசாரியரிடத்து நீ கேட்டி(வினவி)ருக்கின்றாயா?)" என்பது (சு, க, க) முதலிய வாக்கியத்தால் அர்த்தவாதவடிவ அத்வைத ஞானத்தின் ஸ்துதி சொல்லப்பட்டிருக்கின்றது. (ங)

उपपत्तिर्यथा सोम्यैकेनेत्यादिनिदर्शनम् ।
एतैश्छांदोग्यतात्पर्यं षष्ठगं त्विष्यतेऽद्वये ॥ ४ ॥

(உரை) சு. "यथा सोम्यैकेन मृत्पिंडेन सर्वं मृन्मयं विज्ञातँ स्यात् (ஸோமியனே! எப்படி ஒரு மட்பிண்டத்தால் கடாதிகாரியம் யாவும் மண்மயமாக அறியப்பட்டதாகின்றதோ,)" என்பது (சு, க, ச—ரு) முதலியவாக்கியங்களிலுள்ளது திருஷ்டாந்தவடிவ உபபத்தியாம். இந்த லிங்கங்களால் ஆறுமத்தியாயத்திலுள்ள சாந்தோக்யோபநிஷத்தின் தாற்பரியம் அத்வைதப் பிரஹ்மத்தில் அங்கீகரிக்கப்பட்டுளது. (ச)

## சப்தமாத்தியாயலிங்ககீர்த்தனம்.

---

शोकं तरति तद्देशे-त्युपक्रम्योपसंहृतिः ।
तस्य ह वेतिवाक्येन तदैक्यमनुभूयताम् ॥ ५ ॥

(உரை) ௧. "तरति शोकमात्मवित् (ஆத்மஞானி சோகத்தைக் கடக்கின்றான்.)" (எ, க, ௩) என்று உபக்கிரமம் செய்து, "तस्य ह वा एतस्यैवं पश्यत एवं मन्वानस्यैवं विजानत आत्मत प्राण आत्मत आशा (அந்த இந்த இவ்வாறு பார்க்கப்பட்டவனும், இவ்வாறு மனனஞ்செய்யப்பட்டவனும், இவ்வாறு அறிபவனுமாகிய புருஷனது ஆத்மாவினின்று பிராணனுண்டாகின்றது. ஆத்மாவினின்றும் ஆசையுண்டாகின்றது." என்னும் (எ, உ௬, ௧) வாக்கியத்திலுல் உபசங்காரம் சொல்லப்பட்டிருக்கின்றது. அவ்விரண்டன் ஐக்கியத்தினை அபறுவிக்க. (௫)

अधस्ताच्च स एव स्यात्तथाऽथातस्त्वहंकृतेरादेशश्च ।
स्मृतोऽभ्यासोऽथात आत्मोपदेशयुक् ॥ ६ ॥

(உரை) ௨. "स एवाधस्तात्स उपरिष्टात् (அதுவே கீழாயிருக்கின்றது. மேலாயிருக்கின்றது." அதுபோல, "अथातोऽहंकारादेश एवाहमधस्तादहमुपरिष्टात् (இப்போது அகங்காரத்தின் உபதேசமேயுளது:—யான் கீழாயிருக்கின்றேன். மேலாயிருக்கின்றேன்.)" அவ்வாறே, "अथात आत्मादेश एवात्मैवाधस्तादात्मोपरिष्टात (இப்போது ஆத்மாவின் உபதேசமாம் :—ஆத்மாவே கீழாயுமிருக்கின்றது; மேலாயுமிருக்கின்றது.)" என்னும் ஆத்மாவின் உபதேசத்தோடு கூடிய (எ, உ௫, ௧—௨) வாக்கியங்களால் அப்பியாசம் சொல்லப்பட்டிருக்கின்றது. (௬)

ऋगादिसर्वविद्यानामगोचरतयात्मनः ।
अपूर्वता फलं पश्यो नैव मृत्युं हि पश्यति ॥ ७ ॥

(உரை) ரு. "स होवाचर्ग्वेदं भगवोऽध्येमि (நாரதர் சநத்குமாரரிடத்துக் கூறலாயினார்:—பகவானே! ருக்வேதத்தினைப் படித்திருக்கின்றேன்.)" என்றல் (எ, க, உ—ரு) முதலிய வாக்கியங்களால் ஆத்மாவின், ருக்வேதமுதலிய சர்வவித்தைகளுக்கும் விஷயமாகாமையினால் குருவுபதேசத்தால் அறியப்படுந்தன்மை வடிவ அபூர்வதை சொல்லப்பட்டிருக்கின்றது. சு. "न पश्यो मृत्युं पश्यति (ஞானி மிருத்தியுவைக் காண்கிறதில்லை.)". என்றல் முதலிய (எ, உசு, உ) வாக்கியங்களால் பலம் சொல்லப்பட்டிருக்கின்றது. (எ)

पश्यः पस्यति सर्वं हीत्यर्थवादः सुसूचितः ।
जाता वा आत्मतः प्राणादयो युक्तिः प्रदर्शिता ॥ ८ ॥

(உரை) கு. "सर्वं ह पश्यः पश्यति सर्वमाप्नोति सर्वशः (ஞானி எல்லாவற்றையும் காண்கின்றான். எப்புறத்தானும் எல்லாவற்றையு மடைகின்றான்." (எ, உசு, உ) என்று அர்த்தவாதம் சூசிக்கப்பட்டிருக்கின்றது. கூ. "आत्मातः प्राण आत्मात आशा (ஆத்மாவிலிருந்து பிராணன், ஆத்மாவிலிருந்து ஆசை,)" என்னும் (எ, உசு, க) இவை முதலிய வாக்கியங்களால் ஹேதுவான ஆத்மைக்யபோதக யுக்தியாகிய உபபத்தி காட்டப்பட்டிருக்கின்றது. (அ)

छांदोग्यश्रुतितात्पर्यं सप्तमाध्यायगं बुधैः ।
इष्यते चाद्वये भूम्नि षड्भिर्लिंगैरिमैः स्फुटम् ॥ ९ ॥

(உரை) இவ்வாறு இவ்விலிங்கங்களால் ஏழாவதத்தியாயத்திலுள்ள சாந்தோக்கியோபநிஷத்தின் தாற்பரியம் அத்வைதப்பிரஹ்மத்தில் தெளிவாக அறிஞர்களால் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. (கூ)

---

எட்டாமத்தியாயலிங்ககீர்த்தனம்.

---

य आत्मेत्युपक्रम्यैव तं वा एतमुपासते ।
इत्यादिनोपसंहार एष आत्मेतिवाक्यतः ॥ १० ॥

(உரை) க. य आत्माऽपहतपाप्मा (எவ்வாத்மா பாபமின்றியதா யிருக்கின்றதோ,)" (அ, எ, க) என்று உபக்கிரமம் செய்தே, "तं वा एतं देवा आत्मानमुपासते (அந்த இவ்வாத்மாவினைத் தேவர்கள் நிச்சயமாக உபாசிக்கின்றனர்.)" (அ, கஉ, கூ) என்பது முதலிய வாக்கியங்களால் உபசங்காரம் சொல்லப்பட்டிருக்கின்றது. உ. "एष आत्मेति होवाचैतदमृतमभयमेतद्ब्रह्मेति (இது ஆத்மா, இது அமிருதம், அபயம், இது பிரஹ்மம் என்று கூறினர்.)" (அ, க0, க) என்னும் வாக்கியத்தினால். (க0)

अभ्यासोऽपूर्वता ब्रह्म-चर्येणेत्यादितः फलम् ।
पुनरावर्तते नैव स इत्यादिरवेरितम् ॥ ११ ॥

(உரை) அப்பியாசம் சொல்லப்பட்டிருக்கின்றது. க. "तद्य एवैतं ब्रह्मलोकं ब्रह्मचर्येणानुविन्दन्ति तेषामेवैष ब्रह्मलोकः (அதனால் எவர்கள் தான் இந்தப் பிரஹ்மலோகத்தினை பிரஹ்மசரியத்தினால் சாஸ்திராசாரிய வுபதேசத்தின் பின் பிராப்தமாக்குகின்றார்களோ, அவர்கட்கே இந்தப்பிரஹ்மமாகிய லோகம் வாய்க்கின்றது.)" என்பது. (அ, ச, கூ) முதலிய வாக்கியங்களால் அபூர்வதை தொனிக்கின்றது.

"ब्रह्मलोकमभिसंपद्यते न च पुनरावर्तते (பிரஹ்மவடிவ லோகத்தினை அடைகின்றான். மறுபடியும் திரும்புகிறதில்லை.)" என்பது (அ, கரு, க) முதலிய வாக்கியங்களால் சொல்லப்பட்டதாம் பலம். (கக)

आख्यायिकाऽर्थवादः स्यादिंद्रस्यासुरस्वामिनः ।
अशरीरोवायुरभ्रमित्यादिर्युक्तिरीरिता ॥ १२ ॥

(உரை) ௬. இந்திரவிரோசனர்களது ஆக்கியாயிகை (கதை) அர்த்தவாதமாம். ௬. " अशरीरो वायुरभ्रं विद्युत्स्तनयित्नुरशरीराण्येतानि (வாயு அசரீரமாம். மேகம், மின்னல், மேக்கர்ஜனை என்னு மிவை அசரீரமாம்.)" என்பது (அ, ௧௨, ௨) முதலிய அபேதகயுக்திவடிவ உபபத்தி சொல்லப்பட்டிருக்கிறது. (௧௨)

छांदोग्यश्रुतितात्पर्याष्टमाध्यायगं त्विमैः ।
इष्यतेऽद्वय एवास्मिन्ब्रह्मण्येतत्प्रदर्शितम् ॥ १३ ॥

(உரை) இந்த லிங்கங்களினாலே அஷ்டமாத்தியாயத்திலுள்ள சாந்தோக்யோபநிஷத்தின் தாற்பரியம் இவ்வத்வைதப் பிரஹ்மத்திலேயே அங்கீகரிக்கப்படுகின்றதென்பது காட்டப்பட்டது. (௧௩)

சாந்தோக்யோபநிஷத்லிங்ககீர்த்தனமென்னும்

பத்தாம்பிரகரணம்

முடிந்தது.

---

## ௧௧. பிருகதாரண்யகோபநிஷத்லிங்ககீர்த்தனம்.

அதில் முதலத்தியாயலிங்ககீர்த்தனம்.

आत्मेत्येवेत्यादिर्वाक्यादुपक्रम्योपसंहृतिः ।
लोकमात्मानमेवोपासीतेत्यादिसमीरणात् ॥ १ ॥

(உரை) ௧. "आत्मेत्येवोपासीत (ஆத்மாவென்றே அறிக.)" என்பது (௧, ௪, ௭) முதலிய வடிவ வாக்கியத்தால்

உபக்கிரமம் செய்து, "आत्मानमेव लोकमुपासीत (ஆத்மாவா கிய லோகத்தையே அறிக.)" என்னும் ௧-வது அத்தியா யத்தினது ௪-வது பிராஹ்மணத்தின் ௧௫-வது முதலிய வாக்கியத்தினால் உபசங்காரம் சொல்லப்பட்டிருக்கின்றது.

तदेतत्पदनीयं च तदेतत्प्रेय इत्यपि ।
वाक्यमारभ्य संप्रोक्तोऽभ्यासस्तस्य परमात्मनः ॥ २ ॥

(உரை) ௨. "तदेतत्पदनीयमस्य सर्वस्य यदयमात्मा(அந்த இது பிராப்தமாக்க (அடைய)த்தக்கதாம். யாதொரு இஃது எல்லாவற்றின் ஆத்மாவாம்.)" (௧, ௪, ௭) என்றும், "तदेतत्प्रेयः पुत्रात्प्रेयो वित्तात् (அந்த இது புத்திரனினும் பிரியமுள்ளது தாம். வித்தத்தினும் பிரியமுள்ளதாம்.)" (௧, ௪, ௮) என் னும் வாக்கியம் தொடங்கி, மேல் (௧, ௪, ௧0-ல்) இருமுறை "अहं ब्रह्मास्मि=யான் பிரஹ்மம்" என்னும் மகாவாக்கியத் தினைச் சொல்லுதல் புரியந்தமும் அப்பரமாத்மாவின் அப் பியாசம் சொல்லப்பட்டிருக்கின்றது. (௨)

तदाहुर्यदितीरोया अपूर्वत्वं समिंगितम् ।
य एवं वेद वाक्येन सर्वात्मत्वं फलं स्मृतम् ॥ ३ ॥

(உரை) ௩. "तदाहुर्यद्ब्रह्मविद्यया सर्वं भविष्यंतो मनुष्या मन्यंते (அதனைக் கூறுகின்றனர். எதனைப் பிரஹ்மவித்தை யினால் எல்லாமாவோமாகியமனிதர் மதிக்கின்றனரோ,)" (௧, ௪, ௯) என்னும் வாக்கியத்தினால் பிரமாணாந்தரத்திற்கு விஷயமாகாத ஜீவர்களின் சர்வாத்மத்தன்மைவடிவ அபூர் வதை அங்கீகரிக்கப்பட்டதாம். ௪. "य एवं वेदाहं ब्रह्मास्मीति स इदं सर्वं भवति (எவன் இவ்வாறு 'யான் பிரஹ்மம்' என்று அறிகின்றானோ அவன் இவ்வெல்லாமுமாகின்றான்)" என்

னும் (க, ச, க0) வாக்கியத்தினுல் ஞானத்தால் ஸர்வாத்மத் தன்மை வடிவ பலம் சொல்லப்பட்டிருக்கின்றது. (௩)

तस्यामूत्यै हि देवाश्च नेशते हेतिवाक्यतः ।
अर्थवादो द्विरूपो वै प्रोक्तः श्रुत्या स्फुटोक्तितः ॥ ४ ॥

(உரை) ௫. "तस्य ह न देवाश्च नाभूत्या ईशते (அந்த பிரஹ்மஞானமுடையவனது சர்வாத்மக பிரஹ்மபாவத்தினைத் தேவர்களும் திரஸ்கரித்தற் பொருட்டுச் சமர்த்தரார்.)" என்னும் (க ச, க0) இவை முதலியவாக்கியத்தால் அபேதஞானத்தின் ஸ்துதியும் பேதஞானத்தின் நிந்தையுமான இருவடிவ அர்த்தவாதம் சுருதியினுல் ஸ்பஷ்டமான வார்த்தையினுற் சொல்லப்பட்டிருக்கின்றது. (௪)

उपपत्तिः स एषो हीहेतिवाक्यात्स्मृता त्विमैः ।
बृहदारण्यकाद्यस्याद्वैते तात्पर्यमिष्यते ॥ ५ ॥

(உரை) க. "स एष इह प्रविष्ट आनखाग्रेभ्यः (அந்த இப்பரமாத்மா நகநுனிபரியந்தம் இச்சரீரத்திற் பிரவேசித்தார்.)" இவை முதலிய (க, ச, எ) வாக்கியத்தினுல் உபபத்தி சொல்லப்பட்டிருக்கின்றது. இந்த லிங்கங்களால் பிருகதாரணியகோபநிஷத்தின் முதலத்தியாயத்திற்கு அத்வைதப்பிரஹ்மத்தில் தாற்பரியம் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. (௫)

---

## இரண்டாமத்தியாயலிங்ககீர்த்தனம்.

---

ब्रह्म तेऽहं ब्रवाणीति सामान्योपक्रमः स्मृतः ।
व्येव त्वा ज्ञपयिष्यामि विशेषोपक्रमस्त्वयम् ॥ ६ ॥

(உரை) க. "ब्रह्म तेऽहं ब्रवाणीति (பிரஹ்மத்தினை உமக்குச்சொல்லுகின்றேன்.)" (உ, க, க) என்பது சாமா

னிய உபக்கிரமம். "ब्रह्म ते ब्रवाणि (பிரஹ்மத்தினை உமக்குச் சொல்லுகின்றேன்.)" (உ, க, கரு) என்பதோ விசேஷ உபக்கிரமமாம். (௬)

यः एषः पुरुषो विज्ञानमयस्तूपसंहृतिः ।
सामान्यतो विशेषेण तदेतद्ब्रह्म चेत्यपि ॥ ७ ॥

(உரை) "यः एषः पुरुषो विज्ञानमयः (யாதொரு இந்தப் புருஷன் விஞ்ஞானமயன்.)" (உ, க, கசு) எனப்பதோ சாமானியமாக உபசங்காரமாம். "तदेतद्ब्रह्मापूर्वमनपरं (அந்த இப்பிரஹ்மம் காரணமின்றியதும் காரியமின்றியதுமாய்.)" (உ, ரு, கசு) என்பது விசேஷமாக உபசங்காரமாம். (எ)

सत्यं सत्यस्य चाथात आदेशो नेति नेति च ।
स योऽयमिति चाभ्यासो बहुकृत्व उदीरितः ॥ ८ ॥

(உரை) உ. "सत्यस्य सत्यं (சத்தியத்தின் சத்தியமாம்.)" (உ, க, உ0-உ, ௩, ௬) என்பதும், "अथात आदेशो नेति नेति (ஆதலால் இப்போது இத்தன்மையதன்று இத்தன்மையதன்று என்பது உபதேசமாம்.)" (உ, ௩, ௬) என்பதும், "स योऽयमात्मेदममृतमिदं ब्रह्मेदं सर्वम् (அந்த யாதொரு இவ்வாத்மாவாம். இது அமிருதமாம். இது பிரஹ்மமாம். இஃது எல்லாமாம்.)" (உ, ரு, க—கரு) என்பதுமாக இவ்வாறு வெகுவாக அப்பியாசம் சொல்லப்பட்டிருக்கின்றது. (அ)

विज्ञातरमरे ! केनेत्यादिनाऽपूर्वता मता ।
यत्र वास्य ह्यभूदात्मैव सर्वं चादितः फलम् ॥ ९ ॥

(உரை) ௩. "विज्ञातारमरे ! केन विजानीयात् (ஓ ! மைத்ரேயி ! விஞ்ஞாதாவை (அறிபவனை) எதனால் அறியலாம் ?)

என்பது (௨, ௪, ௧௪) முதலிய வாக்கியங்களால் பிரமாணாந்தரத்திற்கு விஷயமாகாமைவடிவ அபூர்வதை அங்கிகரிக்கப்பட்டிருக்கின்றது. ௪. " यत्र वा अस्य सर्वमात्मैवाभूत्तत्केन कं जिघ्रेत् (எந்த மோக்ஷத்தில் இந்த வித்வானுக்கு எல்லாம் ஆத்மாவே யாயிற்றோ, அங்கு எதனால் எதனை முகருவான்.)" என்பது (௨, ௪, ௧௪) முதலிய வாக்கியத்தினால் நிஷ்பிரபஞ்சப் பிரஹ்மவடிவமாக நிலைத்தல் வடிவ அத்வைதஞானத்தின் பலம் சொல்லப்பட்டிருக்கின்றது. (௯)

परादाद्ब्रह्म ते चैवाख्यायिका बह्वोऽपि च ।
अर्थवादस्तूपपत्तिरूर्णनाभ्याद्यनेकशः ॥ १० ॥

(உரை) ௫. " ब्रह्म तं परादाद्योऽन्यत्रात्मनो ब्रह्म वेद (பிராஹ்மணஜாதியின் ஆத்மாவினும் வேறிடத்திற் காண்பவனெவனோ அவனைப் பிராஹ்மணஜாதி திரஸ்காரஞ்செய்கின்றது.)" (௨, ௪, ௬) என்னும் பேதஞானத்தின் நிந்தையும் வெகு ஆக்யாயிகையும் அர்த்தவாதமாம். ௯. " स यथोर्णनाभिस्तंतुनोच्चरेद्यथाऽग्नेः क्षुद्रा विस्फुलिंगा व्युच्चरंति (அது எப்படிச் சிலந்திப்பூச்சி தந்துவினால் மேலெழும்புகின்றதோ, எப்படி அக்கினியினின்றும் அற்ப அக்கினியின் அவயவும் பலவாக மேலெழும்புகின்றனவோ,)" என்னும் (௨, ௧, ௨௦) முதலிய (௨, ௪, ௯—௧௨) வாக்கியங்களில் அநேக திருஷ்டாந்தவடிவ உபபத்தி யிருக்கின்றது. (௧௦)

बृहदारण्यकस्यैव द्वितीयाध्यायस्याद्वितीयके ।
तात्पर्यं त्विष्यते प्राज्ञैरभिलिंगैः समिंगितैः ॥ ११ ॥

(உரை) பிருகதாரணியகோபநிஷத்தின் இரண்டாமத்தியாயத்திற்குப் பண்டிதர்களால் சூசிக்கப்பட்ட இந்தலிங்கங்களால் அத்விதியப்பிரஹ்மத்தில் தாற்பரியம் அங்கிகரிக்கப்பட்டுள்ளது. (௧௧)

## ௩. மூன்றாமத்தியாயலிங்ககீர்த்தனம்.

यत्साक्षादित्युपक्रम्योपसंहारस्तु वाक्यतः ।
विज्ञानमित्यतः प्रोक्त आवृत्तिरेष ते स्वात् ॥ १२ ॥

(உரை) க. "यत्साक्षादपरोक्षाद्ब्रह्म (யாதொரு சாக்ஷாத் அபரோக்ஷமாக பிரஹ்ம மிருக்கின்றதோ,)" (௩, ௪, ௧) என்று உபக்கிரமம் செய்து, "विज्ञानमानन्दं ब्रह्म (விஞ்ஞானநந்தவடிவம பிரஹ்மம்)" என்னும் (௩, ௯, ௨௮) வாக்கியத்திலே உபசங்காரம் சொல்லப்பட்டிருக்கின்றது. உ. "एष त आत्माऽन्तर्याम्यमृतः (இந்த உன்னுடைய ஆத்மா அந்தர்யாமி அமிருதரூபமாம்.)" (௩, எ, ௩—௨௩) என்னும் வாக்கியத்தினால் ஆவிருத்தியாகிய அப்பியாசம் சொல்லப் பட்டிருக்கின்றது. (௧௨)

तं त्वौपनिषदं चाहं पृच्छामीति त्वपूर्वता ।
फलं परायणं चैतात्तिष्ठमानस्य तद्विदः ॥ १३ ॥

(உரை) ௩. "तं त्वौपनिषदं पुरुषं पृच्छामि (அந்த உபநிஷத்துக்களால் அறியப்படும் புருஷனை உன்னிடம் கேட் (கின்வு)கின்றேன்.)" (௩, ௯, ௨௬) என்று, உபநிஷத்துக் கட்கே விஷயமாதல்வடிவ அபூர்வதை சொல்லப்பட்டிருக் கின்றது. ௪. "परायणं तिष्ठमानस्य तद्विदः (இந்தப்பிரஹ்மம் அத்வைததத்துவத்தில் நிலைத்த தத்துவஞானிக்குப் பரமகதியாம்.)" (௩, ௯, ௨௮) என்று பலம் சொல்லப்பட்டிருக் கின்றது. (௧௩)

यो वै तत्काप्य ! सूत्रं तं विद्याच्चेत्यादितोऽपि च ।
यो वै एतच्च न ज्ञात्वाऽक्षरं गार्गीति च स्तुतिः ॥ १४ ॥

(உரை) ௫. "यो वै तत्काप्य ! सूत्रं वियात्तं चांतर्यामिण-मिति स ब्रह्मवित्(காப்ய ! எவன் அச்சூத்திரத்தினையும் அவ்வந்தர்யாமியினையு மறிகின்றானோ, அவன் பிரஹ்மவித்து.)" (௩, எ, க) என்பதும், "यो वा एतदक्षरं गार्ग्यविदित्वास्मिन्लोके जुहोति (கார்கியே ! எவன் இவ்வக்ஷரத்தினை யறியாது, இவ்வுலகத்தில் ஓமிக்கின்றானோ,)" (௩, அ, ௧0) என்பதுமாகிய இவைமுதலிய வாக்கியத்தினால் அபேதஞானத்தின் ஸ்துதியும் च காரத்தினால் (உம்மையால்) பேதஞானத்தின் நிந்தைவடிவமுமான அர்த்தவாதம் சொல்லப்பட்டிருக்கின்றது. (௧௪)

एतस्य वा अक्षरस्येत्यादितो युक्तिरीरिता ।
तटस्थलक्षणस्योप-न्यासेन परमात्मनः ॥ १५ ॥

(உரை) ௬. "एतस्य वा अक्षरस्य प्रशासने गार्गि ! सूर्याचन्द्रमसौ विधृतौ तिष्ठतः (கார்கியே ! இவ்வக்ஷரத்தினது ஆணையில் சூரியசந்திரர்கள் தரிக்கப்பட்டு நிலைத்திருக்கின்றனர்.)" (௩, அ, ௯) இவை முதலியவாக்கியத்தால் பரமாத்மாவினது தடஸ்தலக்ஷணத்தின் உபந்யாசத்தினால் உபபத்தி சொல்லப்பட்டிருக்கின்றது. (௧௫)

बृहदारण्यकश्रुत्यास्तृतीयस्य समिष्यते ।
तात्पर्यमद्वये लिंगैरेभिस्तु परमात्मनि ॥ १६ ॥

(உரை) பிருகதாரண்யகோபநிஷத்தின் மூன்றாமத்தியாயத்திற்கு இந்த லிங்கங்களால் அத்வயபரமாத்மாவில்தாற்பரியம் செவ்வையா யங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. (௧௬)

நான்காமத்தியாயலிங்ககீர்த்தனம்.

इंधश्च किमुपक्रम्याभयं स उपसंहृतिः ।
सामान्यतो विशेषेण यत्र त्वस्येति वाक्यतः ॥ १७ ॥

(உரை) க. "इंधो ह वै नाम (இந்தம் என்னும் பிரசித்தமான பெயராம்.)" (௪, உ, உ) என்று சாமானியமாகவும், "किं ज्योतिरियं पुरुष इति (எந்த ஜோதியுடையவன் இப்புருஷன்)" (௪, ௩, உ) என்று விசேஷமாகவும் உபக்கிரமம் செய்து, "अभयं वै जनक! प्राप्तोसि (ஜநகரே! நீர் அபயத்தினை அடைந்திருக்கின்றீர்.)" (௪, உ, ௪) என்பதும், அல்லது "स वा एष महानज आत्मा (அதுவே இது பெரிய அஜ ஆத்மாவாம்.)" (௪, ௪, உ௫)என்பதும் சாமானியமாக உபசங்காரமாம். "यत्रत्वस्य सर्वमात्मैवाभूत् (எங்கு எல்லாம் ஆத்மாவே ஆயிற்றோ,)" (௪, ௫, க௫) என்னும் வாக்கியத்தினால் விசேஷமாக உபசங்காரமாம். (௧௭)

तद्देवा ज्योतिषां ज्योतिरायुर्होपासतेऽमृतम् ।
इत्यादिबहुभिर्वाक्यैरभ्यासः स्पष्टमीक्ष्यते ॥ १८ ॥

(உரை) உ. "तद्देवा ज्योतिषां ज्योतिरायुर्होपासतेऽमृतम् (இந்தப் பிரஹ்மத்தினைத் தேவர்கள் ஜோதிகட்கு ஜோதி, ஆயுள், அமிருதவடிவமென்று உபாசிக்கின்றனர்.)" என்பது (௪, ௪, கசு) முதலிய வாக்கியங்களால் அப்பியாசம் தெளிவாய்க் காணப்படுகின்றது. (௧௮)

विज्ञातारमगृह्यो च न तं पश्यत्यपूर्वता ।
अथाकामयमानो य इत्यादिबहुभिः फलम् ॥ १९ ॥

(உரை) ௩. "विज्ञातारमरे! केन विजानीयात् (ஓ! மைத்ரேயி! விஞ்ஞாதாவை எதனாலறியலாம்)" (௪, ௫, க௫),

“ अगृह्यो न हि गृह्यते (கிரகிக்கத்தக்கதாகாமையின் கிரகிக்கப்படுகிறதில்லை.)” (௪, ௪, ௨௨), “ न तं पश्यति कश्चन (அதனை சாஸ்திரகுருவுபதேசமின்றி ஒருவனும் காண்கிறதில்லை.) ” (௪, ௩, ௧௪) இவை முதலிய வாக்கியங்களால் அபூர்வதையாம். ௪. “ अथाकामयमानो यो (அன்றியும் எவன் நிஷ்காமனோ,) ” (௪, ௪, ௬–௮) என்னும் இவைமுதலிய வெகுவாக்கியங்களால் பலம் சொல்லப்பட்டிருக்கின்றது.

मृत्योः स मृत्युमाप्नोति य इह नानेव पश्यति ।
एत एतमु हैवेत्या-दिवाक्याच्च स्तुतिः स्मृता ॥ २० ॥

(உரை) ௫. “ मृत्योः स मृत्युमाप्नोति य इह नानेव पश्यति (எவன் இங்கு நானாவினைப்போல காண்கின்றானோ, அவன் மிருத்தியுவினின்றும் மிருத்தியுவை யடைகின்றான்.)” என்பதும் (௪, ௪, ௧௧), “ एतमु हैवैते न तरतः (இந்த ஞானியை இப்புண்ணிய பாபங்கள் கடப்ப(வியாபிக்கிற)தில்லை.)” (௪, ௪, ௨௨–௨௩) என்பதுமான இவைமுதலிய வாக்கியங்களால் நிந்தையும் ஸ்துதியுமான அர்த்தவாதம் சொல்லப்பட்டிருக்கிறது. (௨௦)

यद्वै तन्नेति प्राणस्य प्राणं चैव न वा अरे! ।
पत्युः कामाय वैवायं पतिर्हि भवति प्रियः ॥ २१ ॥

इत्यादिवाक्यजातेनो-पपत्तिः परिकीर्तिता ।
बृहदारण्यकश्रुत्याश्चतुर्थाध्यायगं बुधाः ॥ २२ ॥

तात्पर्यमद्वये षड्भिरेवमेर्लिंगकैर्विदुः ।
अग्नेर्धूम इवेमानि लिंगान्यस्य-परात्मनः ॥ २३ ॥

(உரை) க. "यद्वै तन्न पश्यति (எங்கு சுழுத்தியில் அவ்வடிவத்தினை அறிகிறதில்லையோ)" (ச, ௩, உ௩—௩0) என்பதும், "प्राणस्य प्राणमुत (பிராணனுக்கும் பிராணனை அறிகிறதில்லை.)" (ச, ச, க௮) என்றும், "न वा अरे ! पत्युः कामाय पतिः प्रियो भवत्यात्मनस्तु कामाय पतिः प्रियो भवति (ஓ! மைத்ரேயி! பதியின் காமத்தின் பொருட்டுப் பதி பிரியனாகிறதில்லை. தனது காமத்தின் பொருட்டோ பதி பிரியனாகின்றான்" (உக) என்பதுமான (ச, ரு, ௬) இவை முதலிய (ச, ரு, அ—க௩) வாக்கியங்களின் சமூகத்தினால் பிரஹ்மவடிவ ஆத்மாவினைப் போதித்தலின் யுக்திவடிவ உபபத்தி சொல்லப்பட்டிருக்கின்றது பண்டிதர் இந்தப் பிருகதாரணியகவடிவ உபநிஷத்பாகத்தின் நான்காமத்தியத்தின்கணுள்ள (உஉ) அத்வைதத்தில் தாற்பரியத்தினை இவ்வாறு லிங்கங்களால் அறிகின்றனர். அக்கினியினை நிச்சயிக்கும் புகைவடிவ லிங்கத்தினைப் போல இப்பிரத்தியகபின்னபிரஹ்மத்தினை நிச்சயிக்கும் இவை லிங்கங்களாம் (என்று அறிக.) (உ௩)

इति संक्षेपतः प्रोक्ता षड्लिंगानां विचारणा ।
दशोपनिषदां तद्वत्तामन्यास्वपि योजयेत् ॥ २४ ॥

(உரை) இவ்வாறு சுருக்கமாகப் பதது உபநிஷத்துக்களினது ஆறு லிங்கங்களின் விசாரம் சொல்லப்பட்டிருக்கிறது. அதனைப்போல அவ்விசாரத்தினை வேறு உபநிஷத்துக்களிலும் பொருத்திக்கொள்க. (உச)

॥௯௩॥ दोषोप्यत्रोपयुक्तत्वाद्गुण एवेति चिंत्यताम् ।
सारग्रहणशीलैस्तु पितृभ्यां बालवाक्यवत् ॥ २५ ॥

(உரை) இந்நூலில் ஒரோவிடத்துத் தோஷமும் உபயோகியா யிருத்தலின் "குணமுடையதேயாம்" என்று

சாரத்தினைக் கிரகிக்கும் ஸிவபாவமுடைய கவிகளால் விசாரிக்கத்தக்கதாம்; மாதாபிதாக்களால் விநோதத்தின் பொருட்டேயாகமுள்ள பாலனது மழலைச்சொல்லினைப் போல.

பிருகதாரண்யகோபநிஷத்லிங்ககீர்த்தன மென்னும்

பதினோராம்பிரகரணம்

முடிந்தது.

இவ்வாறு ஸ்ரீ சுருதிஷட்லிங்கசங்கிரகம்

தமிழுரையுடன்

முடிந்தது.

---

|| ॐ तत्सद्ब्रह्मणे नमः ||

---

